2nd July 1962]

போலீஸ் இலாகா சிப்பந்திகள் (திருத்தணி)

*86-டி கேள்வி.—திரு. முனு. ஆதி: கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

6—4—1960 அன்று படாஸ்கர் தீர்வின்படி தமிழ் நாட்டுடன் இணைக்கப்பெற்ற திருத்தணி தாலுகாவில், போலீஸ் இலாகாவைச் சேர்ந்தவர்கள் தமிழ்நாடு அரசாங்க சம்பள விகிதப்படி சம்பளமும், அலவன்சும் பெறுகிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: No, Sir. Pay and allowances are being paid to them on the same scales as they were drawing in the Andhra Pradesh State immediately before they were transferred to this State.

துறையூர் அரசாங்க ஊழியர் சங்கம் (முறையீடு)

*86-இ கேள்வி.—திரு. து. ப. அழகமுத்து: கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தமிழ்நாடு என்.ஜி.ஜி.ஒஸ். அசோசியேஷன் துறையூர் சென்டரிலிருந்து வீட்டு வாடகைச் சலுகை கோரி விண்ணப்பம் ஏதேனும் வந்துள்ளதா ?

(இ) அதன் மேல் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) No, Sir.

(b) Does not arise.

MR. SPEAKER: Questions are over.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

III.—ANSWERING OF MAIN QUESTIONS IN TAMIL.

திரு. இரா. நெடுஞ்செழியன்: கனம் அவைத் தலைவர் அவர்களே, மன்றத்தில் எழுப்பப்படுகின்ற வினாக்கள் தமிழில் எழுப்பப்பட்டாலும் அவைகளுக்குக் கொடுக்கக்கூடிய முதல் பதில்கள் எல்லாம் ஆங்கிலத்தில் தான் தரப்படுகின்றன. துணைக் கேள்விகளுக்குப் பதில்கள் தமிழிலேயே கொடுக்கப்பட்டாலும் முதல் கேள்விகளுக்குக் கொடுக்கப்படும் பதில்கள் எல்லாம் ஆங்கிலத்தில் தான் கொடுக்கப்படுகின்றன. அப்படிக் கொடுக்கப் படுவதால் அவற்றைப் புரிந்துகொண்டு உடனடியாகத் துணைக் கேள்விகளைக் கேட்க சில உறுப்பினர்களுக்கு முடியாமல் இருக்கிறது. அவற்றை மொழிபெயர்த்து புரிந்துகொண்டு துணைக் கேள்விகள் கேட்பதற்கும் சங்கடமாக இருக்கிறது. ஆகவே முதல் கேள்விகளுக்குக் கொடுக்கக்கூடிய பதில்களையும் தமிழிலேயே கொடுத்தால் அவற்றைப் புரிந்து கொண்டு துணைக்கேள்விகள் கேட்பதற்கு எவ்வளவோ வசதியாக இருக்கும். ஆகவே அவ்விதம் தமிழிலேயே பதில்களைக் கொடுக்க, வேண்டிய முயற்சிகளை அவையின் அரசாங்கக் கட்சி தலைவர் முயற்சி எடுக்க வேண்டும் என்று